உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பத்தாவது,

# ஏனாதிநாத நாயனார் புராணம்

ஈழக்குலச்சான்றோரெயினனூர்வாழேனாதிநாதனாரிறைவனீற்றைத்
தாழத்தொழுமரபார்படைகளாற்றந்தன்மைபெறுவரிசூரன்சமரிற்றோற்
வாழத்திருநீறுரிசாத்தக்கண்டுமெருண்டார்தெருண்டார்கைவாள்விடார்
வீழக்களிப்பார்போனின்றேயாக்கைவிடுவித்தாரசிவனருளேமேவினரே.

சோழமண்டலத்திலே எயினனூரில் சான்றோர் குலத்திலே விபூதி மகாபத்தியுடையவராகிய ஏனாதிநாதர் என்பவர் ஒருவர் இருந்தார். அ அரசர்களுக்கு வாள்வித்தையைப்பயிற்றி அதனால் வந்த வளங்கள் எல் வற்றையும் சிவனடியார்களுக்கு நாடோறும் கொடுத்துவந்தார், இப்ப நிகழுங்காலத்தில் வாள்வித்தைப்பயிற்றலிலே அவரோடு தாயபாகம்பெ அதிசூரன் வாள்வித்தைப் பயிற்றுதலினால் வரும் ஊதியம் நாளுக்குநா தனக்குக் குறைதலையும் ஏனாதிநாதநாயனாருக்கு அதிகரித்தலையும் கண் பொறாமையுற்று அவரோடு போர்செய்யக்கருதி வீரக்கூட்டத்தோடும்போ அவர் வீட்டுத்தலைக்கடையில் நின்று போர்செய்தற்கு வரும்படி அழை ஏனாதிநாதநாயனார் யுத்தசன்னத்தராகிப்புறப்பட்டார். அப்பொழுது அ டத்திலே போர்த்தொழில்கற்கும் மாணாக்கர்களும் யுத்தத்திலே சாமர் தியமுள்ள அவர்பந்துகளும் அதைக்கேள்வியுற்று விரைந்துவந்து, அவ க்கு இரண்டுபக்கத்திலும் சூழ்ந்தார்கள். போருக்கு அறைகூவிய அதி ரன் ஏனாதிநாதரைநோக்கி நாம் இருவரும் இதற்குச் சமீபமாகிய வெளி லே சேனைகளை அணிவகுத்து யுத்தஞ்செய்வோம் யுத்தத்தில் வெற்றிகொ பவர் எவரோ அவரே வாள்வித்தைபயிற்றும் உரிமையை பெறல்வேண்டு என்றுசொல்ல, ஏனாதிநாயனாரும் அதற்கு உடன்பட்டார். இருவரும் த கள் தங்கள் சேனைகளோடு அவ்வெளியிலேபோய் கலந்து யுத்தஞ்செய்தா கள் யுத்தத்திலே அதிசூரன் ஏனாதிநாயனாருக்குத் தோற்று எஞ்சிய சே சேனைகளோடும் புறங்காட்டியோடினான், அன்றிரவு முழுதும் அவ தன்னுடைய தௌர்ப்பலியத்தை நினைந்து நித்திரையின்றித் துக்கித்து கொண்டிருந்து ஏனாதிநாயனாரை வெல்லுதற்கேற்ற உபாயத்தை ஆலோ சித்து வஞ்சனையிலே ஜயிக்கும்படி துணிந்து, விடியற்காலத்திலே நமக் உதவியாக நம்முடைய ஊரவர்களை அழைத்துச்சொல்லாமல் நாமிருவரு வேறோரிடத்திலே போர்செய்வோம் வாருமென்று ஏனாதிநாதநாயனாருக் தெரிவிக்கும்படி ஒருவனையனுப்பினான் ஏனாதிநாதநாயனார் அதைக்கே அதற்குடன்பட்டுத் தம்முடைய சுற்றத்தார்கள் ஒருவரும் அறியாதப அவ்வ வாளையும் பரிசையையும் எடுத்துக்கொண்டு தனியேபுறப்பட்டு

சூரன் குறித்த யுத்தகளத்திலே சென்று அவனுடைய வரவை எதிர்ப்பார்த்து நின்றார், முன்னொருபொழுதும் விபூதிதரியாத அதிசூரன் விபூதிதரித்தவர்களுக்கு ஏனாதிநாயனார் எவ்விடத்திலுந் துன்பஞ் செய்யாரென்பதை அறிந்து நெற்றியிலே விபூதியைப்பூசி வாளையும் பரிசையையும் எடுத்துக்கொண்டு. தான்குறித்த யுத்தகளத்திற் சென்று அங்குநின்ற ஏனாதிநாதநாயனாரைக் கண்டு அவர் சமீபத்திலே போம்வரைக்கும் நெற்றியைப் பரிசையினால் மறைத்துக்கொண்டு அவருக்கு முன்னே முடுகி நடந்தான். ஏனாதிநாதநாயனார் அவ்வதிசூரனைக் கொல்லுதற்குச் சமயந் தெரிந்துகொண்டு அடி பெயர்த்தார் அப்பொழுது அதிசூரன் தன்முகத்தை மறைத்துக் கொண்டிருந்த பரிசையைப் புறத்திலே எடுக்க, ஏனாதிநாதநாயனார் அவனுடைய நெற்றியிலே தரிக்கப்பட்ட விபூதியைக் கண்டார், கண்டபொழுதே ஆகெட்டேன் முன் ஒருபொழுதும் இவர் நெற்றியிலே காணாத விபூதியை இன்றைக்குக் கண்டேன், இனி வேறென்ன ஆலோசனை இவர் பரமசிவனுக்கு யடியவராய்விட்டார், ஆதலால் இவருடைய உள்ளக் குறிப்பின் வழியே நிற்பேன் என்று மனசிலே நினைத்து, வாளையும் பரிசையையும் விடக்கருதி, பின்பு நிராயுதரைக் கொன்றதோஷம் இவரை அடையாதிருக்க வேண்டுமென்று எண்ணி அவைகளை விடாமல் எதிர்ப்பவர்போல நேராகநிற்க பாதகனாகிய அதிசூரன் அவரைக் கொன்றான். அப்பொழுது பரமசிவன் அவருக்குத் தோன்றி அவரைத் தம்முடைய திருவடியிலே சேர்த்தருளினார்.

ஏனாதிநாத நாயனார் புராணம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பதினொன்றாவது,

# கண்ணப்ப நாயனார் புராணம்

வேடாதிபதியுடுப்பூர்வேந்தனாகன்விளங்கிய
சேய்திண்ணனார்கன்னிவேட்டைக்
காடதில்வாய்மஞ்சனமுங்குஞ்சிதருமலருங்
காய்ச்சினமென்றிடுதசையுங்காளத்தியார்க்குத்
தேடருமன்பினிலாறுதினத்தளவுமளிப்பச்
சீறுசிவகோசரியுந்தெளியவிழிப்புண்ணீ
ரோடவொருகண்ணப்பியொருகண்ணப்ப
வொழிகவெனுமருள்கொடருகுறுகின்றாரே.

போத்தப்பி நாட்டிலே உடுப்பூரிலே, வேடர்களுக்கு அரசனுடை கன் என்பவன் ஒருவன் இருந்தான், அவன் மனைவி பெயர் தத்தை; விருவரும் நெடுங்காலம் புத்திரபாக்கியம் இல்லாமையால் அதிது கொண்டு குறிஞ்சி நிலத்திற்குக் கடவுளாகிய சுப்பிரமணிய சுவாமி டைய சந்நிதானத்திலே சேவற்கோழிகளையும் மயில்களையும்விட்டு அ வழிபட்டு வந்தார்கள். சுப்பிரமண்ணிய சுவாமியுடைய திருவருளி தத்தையானவள் கருப்பவதியாகி ஒரு புத்திரனைப் பெற்றாள், அப்பி யை நாகன் கையிலே எடுத்தபொழுது திண்ணெனவா யிருந்தபடி அதற்குத் திண்ணன் யென்று பெயரிட்டான், அத்திண்ணனார் வள உரிய பருவத்திலே வில்வித்தை கற்கத் தொடங்கி, அதிலே மகாசாம யம் உள்ளவரானார், நாகன் வயோதிகனானபடியால் வேட்டை முய லே இளைத்தவனாகி, தன் அதிகாரத்தைத் தன் புத்திரராகிய திண்ணனா குக் கொடுத்தான். அந்தத் திண்ணனார் வேட்டைக் கோலங்கொண் டர்களோடும் வனத்திலே சென்று வேட்டையாடினார் வேட்டைய பொழுது ஒரு பன்றியானது வேடரால் கட்டப்பட்ட வலை யறும்படி ந்து, மிகுந்த விசையுடனே ஓடியது. அதைக்கண்ட திண்ணனார் அ கொல்ல நினைந்து அதை தொடர்ந்து பிடிக்கத்தக்க விசையுடனே செல்லும் அடிவழியே சென்றார். நாணன் காடன் என்கின்ற இரண் டர்கள்மாத்திரம் அவருக்குப் பின் ஓடினார்கள். அந்தப்பன்றி நெடுந் ஓடிப்போய், இளைப்பினாலே மலைச்சாரலிலே ஒருமரத்தின் நிழலிலே றது, திண்ணனார் அதைக்கண்டு அதனைச் சமீபித்து உடைவாளை அதனை இருதுண்டாகும்படி குத்தினார், நாணனும், காடனும் இறந் ந்த அந்தபன்றியை கண்டு திண்ணனாரை வியந்துவணங்கி, நெடுந் நடந்தபடியால் பசிநம்மை வருத்துகின்றது, இந்தபன்றியை நெருப் காய்ச்சித் தின்று நீர்குடித்து வேட்டைக்கு மெல்லப்போவோம் என் கள் திண்ணனார் அவர்களைநோக்கி இவ்வனத்திலே தண்ணீர் எங்கு

கின்றதென்றுகேட்க, நாணன் அந்தத்தேக்கமரத்துக் கப்பாலேபோனல் மலைப்பக்கத்திலே பொன்முகலியாறு ஓடுகின்றதென்றான் அதைக்கேட்ட திண்ணனர், இந்தப்பன்றியை எடுத்துக்கொண்டுவாருங்கள், நாம் அங்கே தானே போவோமென்றுசொல்லி அதைநோக்கிநடந்து அரைக்காதவழி தூரத்துக் கப்பால் இருக்கின்ற திருக்காளத்தி மலையைக்கண்டு நாணனை நோக்கி, நமக்கு முன்னாகத்தோன்றுகின்ற மலைக்குப்போவோம் என்று சொல்ல, நாணன் இந்தமலையிலே குடுமித்தேவர் இருக்கிறார் நாம்போனாற் கும்பிடலாம் என்றான்.

திண்ணனர், இந்தமலையைக்கண்டு இதைஅணுகஅணுக என்மேல் ஏற்பட்ட பெரியபாரம் குறைகின்றதுபோலும், இனி உண்டாவது யாதோ அறியேனென்றுசொல்லி. அதிதீவிரமாகிய விருப்பத்தோடும் விரைந்து சென்று, பொன்முதலியாற்றை அடைந்து அதன்கரையிலிருக்கின்ற மரநிழலிலே கொண்டுவந்தபன்றியை இடுவித்து காடனைநோக்கி தீக்கடைகோல் செய்து நெருப்பையுண்டாக்கு, நாங்கள் இம்மலையி லேறிசுவாமி தரிசனஞ் செய்துகொண்டு வந்துசேருவோமென்றுசொல்லி, நாணனோடும் அந்தப் பொன்முகலி நதியைக்கடந்து மலைச்சாரலை அடைந்து மலையிலே நாணன் முன்னே ஏற, தாமும் ஏறிச்சென்று சிவலிங்கம் இருத்தலைக்கண்டார், கண்டமாத்திரத்திலே பரமசிவனுடைய அருட்பார்வையைப்பெற்று, இரும்பானது தரிசனவேதியினாலே உருவம்மாறிப் பொன்மயமானாற்போல முன்னுள்ள குணங்கள்மாறிச் சிவனிடத்தில் வைத்த அன்புருவமானார். நெடுங்காலம் பிரிந்திருந்த தன்குழந்தையைக் கண்டமாதாவைப்போலத் தாழாமல் விரைந்தோடி தோள்கள்நெருங்கும்படி அக்கடவுளைத்தழுவி மோந்து முத்தமிட்டார். நெடுநேரம் பெருமூச்சுவிட்டுக்கொண்டு நின்று, சரீரம்முழுதிலும் உரோமாஞ்சிதம்கொள்ள இரண்டுகண்ணில்நின்றும் கண்ணீர்சொரிய வெயிலிடைப்பட்ட மெழுகுபோல மனங்கசிந்துருக இந்தச் சுவாமி அடியேனுக்கு அகப்பட்டது என்ன ஆச்சரியமென்றுசொல்லி ஆனந்தம்கொண்டார். ஐயையோ சிங்கம், யானை, புலி,கரடி முதலியதுட்ட மிருகங்கள் சஞ்சரிக்கின்றகாட்டிலே நீர் யாதொரு துணையுமின்றி வேடர் போலத்தனியே இருப்பது ஏது என்றுசொல்லித் துக்கித்து தம்முடைய கையில் இருந்தவில்லு கீழேவிழுந்ததையும் அறியாதவராகிப் பரவசமடைந்தார். பின் ஒருவாறுதெளிந்து இவருடைய முடியிலே நீரைவார்த்துப் பச்சிலையையும் பூவையும் இட்டவர் யாரோ என்றார், அப்பொழுது சமீபத்திலேநின்ற நாணன் நான் முற்காலத்திலே உம்முடைய பிதாவுடனே வேட்டையாடிக்கொண்டு இம்மலையிலே வந்தபொழுது ஒருபிராமணன் இவர் முடியிலே நீரைவார்த்து இலையையும் பூவையும் சூட்டி உணவை ஊட்டி சிலவார்த்தைகள் பேசினதைக் கண்டிருக்கிறேன், இன்றைக்கும் அவனே இப்படிச்செய்தான்போலும் என்றான். அதைக்கேட்ட திண்ணனர் அந்தச் செய்கைகளே திருக்காளத்தியப்பருக்குப் பிரீதியாகிய செய்கைகளென்று கடைப்பிடித்தார். பின்பு ஐயோ இவருக்கு அமுதுசெய்தற்கு இறைச்சி

கொடுப்பார் ஒருவரும் இல்லை. இவர் இங்கே தனியேயிருக்கின்றார் இறை
ச்சிகொண்டு வரும்பொருட்டு இவரைப் பிரியவோ மனமில்லை. இதற்கு
என்னசெய்வேன் எப்படியும் இறைச்சி கொண்டுவரவேண்டும் என்று சொ
ல்லிக்கொண்டு சுவாமியைப் பிரிந்து அற்பதூரம்போவார் கன்றைவிட்டுப்
பிரிகின்ற தலையீற்றுப்பசுப்போல அவரிடத்திற்குத் திரும்பிவருவார் கட்டி
அணைத்துக்கொள்வார் மீளப்போவார் அற்பதூரம்போய் அத்தியந்த ஆசை
யோடு சுவாமியைத் திரும்பிப்பார்த்து நிற்பார். சுவாமீ! நீர் உண்பதற்கு
மிருதுவாகிய நல்ல இறைச்சியை நானே குற்றமறத் தெரிந்துகொண்டு வரு
வேன் என்பார், நீர்யாதொரு துணையுமின்றி இங்கு தனியேயிருக்கிறபடி
யால், நான் உம்மைப் பிரியமாட்டேன், உமக்குப் பசிமிகுந்தபடியால்
இங்கே நிற்கவுமாட்டேன், ஐயையோ நான் என்னசெய்வேனென்று சொ
ல்லிக்கோண்டு கண்ணீர் இடைவிடாது பொழியநிற்பார், பின்பு ஒருபிரகா
ரம்போய்வரத் துணிந்து, வில்லையெடுத்துக்கொண்டு கையினாலே கும்பிட்டு
சுவாமி சந்நிதானத்தை அருமையாக நீங்கி மலையினின்றும் இறங்கினார்
பின்னேவர பிறவிஷயங்களிலே உண்டாகும் ஆசை பரமாணுப்பிரமாணமு
மினும் இன்றிஅன்புமயமாகி முகலியாற்றைக்கடந்து கரையேறிஅங்குள்ள
சோலையிலே புகுந்தார். அதுகண்டு காடன் எதிரேபோய்க் கும்பிட்டு நெரு
ப்புங்கடைந்து வைத்திருக்கின்றேன், பன்றியின் அவயவங்க ளெல்லாவற்
றையும் உம்முடைய அடையாளப்படி பார்த்துக்கொள்ளும் திரும்பிப்போ
தற்கு வெகுநேரம் சென்றுபோயிற்று, நீர் இவ்வளவுநேரமும் தாழ்த்தீ
என்னென்றான் நாணன் அதைக்கேட்டு இவர் மலையிலே சுவாமியைக்கண்டு
அவரைத் தழுவிக்கொண்டு மரப்பொந்தைப் பற்றிவிடாத உடும்பைபோல
அவரை நீங்கமாட்டாதவராய் நின்றார், இங்கேயும் அந்தசுவாமி உண்ணுத
ற்கு இறைச்சி கொண்டுபோம்பொருட்டு வந்திருக்கிறார், நமது குலத்தன்
மையை விட்டுவிட்டார், அந்தச்சுவாமி வசமாய்விட்டார் என்றான் உட[illegible]
காடன் திண்ணரே நீரென்னசெய்தீர், என்னபைத்தியங்கொண்டீர் என்[illegible]
சொல்ல, திண்ணனார் அவர்முகத்தைப் பாராமல், பன்றியை நெருப்பிலே
வதக்கி அதினுடைய இனியதசைகளை அம்பினாலே வெவ்வேறாகக் கிழித்து
அம்பிலே கோத்து நெருப்பிலேகாச்சி, பதமாகவெந்தவுடனே சுவைபார்க்
கும்படி அவைகளைத் தம்முடைய வாயிலேயிட்டுப் பல்லினாலேமெல்லமெல்
லப் பலமுறை அதுக்கிப்பார்த்து, மிக இனியனவாகிய இறைச்சிக ளெல்
லாவற்றையும் தேக்கிலையினாலே தைக்கப்பட்ட கல்லையிலே வைத்தினியன
வல்லாத இறைச்சிகள் எல்லாவற்றையும் புறத்திலே உமிழ்ந்தார். அதைக்
கண்ட நாணன் காடன் இருவரும் இவர்மிகப் பைத்தியம்!கொண்டிருக்கின்
றார், மற்றை இறைச்சியை காய்ச்சிப் பல்லினால் அதுக்கிவீணாக உமிழ்கின்
றார், மற்றை இறைச்சியைப்புறத்திலே எறிந்துவிடுகிறார், தாம்மிகப் ப[illegible]
யுடையரா யிருந்தும், அதனை உண்கின்றார் இல்லை எங்களுக்குத் தரு[illegible]
றாரும் இல்லை, இவர் தெய்வப்பைத்தியம் கொண்டிருக்கிறார் இதனைத்[illegible]
கத்தக்கவழி ஒன்றையும் அறியோம், [illegible] நாகனையும் அ[illegible]

த்துக்கொண்டுவந்து இதைத்தீர்க்கவேண்டும், வேட்டைக்காட்டிலே நிற்கின்ற ஏவலாளரையும் கொண்டு நாம்போவோம் என்று நினைத்துக் கொண்டுபோனார்கள்,

திண்ணனார் அவ்விருவரும் போனதை அறியாதவராகி சீக்கிரமாகக் கல்லையிலே மாமிசத்தை வைத்துக்கொண்டு திருமஞ்சனமாடும் பொருட்டு ஆற்றில் நீரை வாயினால் முகந்து, பூக்களைக்கொய்து தலைமயிரிலே செருகி ஒருகையிலே வில்லையும் அம்பையும் மற்றக்கையிலே இறைச்சிவைத்த தேக்கிலைக்கல்லையும் எடுத்துக்கொண்டு, ஐயோ என்னுயிர்த் துணையாகிய சுவாமி மிருந்தபசியினால் இளைத்தாரோ என்று நினைந்து இரங்கிப் பதைப்பதைத்து ஏங்கி, தன்குஞ்சுக்கு இரை அறுத்துதற்கு தாழாதோடுகிற பறவைபோல மனோகதியும் பின்னிட ஓடிப்போய் கடவுளை யடைந்தார். அடைந்து அவருடைய திருமுடிமேல் இருந்த பூக்களைத் தம்முடைய காற்செருப்பினால் மாற்றி, தம்முடைய வாயில் இருக்கின்ற திருமஞ்சனநீரைத் தம்முடைய மனசில் உள்ள அன்பை உமிழ்பவர்போலத் திருமுடியின்மேல் உமிழ்ந்து தம்முடைய தலையிலிருந்த பூக்களைத் திருமுடியின்மேலே வணங்கி சாத்தி தேக்கிலையிலே படைத்த இறைச்சியைத் திருமுன்னே வைத்து கொழுமையாகிய இறைச்சிகளெல்லாவற்றையும் தெரிந்து அம்பினாலே கோத்து நெருப்பிலே பதத்தோடு காய்ச்சிப் பல்லினால் அதுக்கி நாவினாலே சுவை பார்த்துப் படைத்தேன் இவ்விறைச்சி மிக நன்றாயிருக்கிறது, சுவாமீ! இதை அமுதுசெய்தருளும் என்றுசொல்லி உண்பித்தார். பின்பு சூரியன் அஸ்தமனமாயிற்று. திண்ணனார் அவ்விரவிலே துஷ்டமிருகங்கள் சுவாமிக்குத் துன்பம்செய்தல் கூடுமென்று அஞ்சி, அம்பு தொடுக்கப்பட்டவில்லை கையிலே பிடித்துக்கொண்டு மறந்தும் கண்ணிமையால் சுவாமிக்குப் பக்கத்திலே ஜாகரூகமாக நின்றார், நின்ற திண்ணனார் வைகறையிலே சுவாமிக்கு இறைச்சி கொண்டுவரும்பொருட்டு வேட்டையாடுதற்கு மலைச்சாரலுக்குப்போயினர். அதுநிற்க,

அறிவு, அருள், அடக்கம், தவம், சிவபத்தி முதலியவைக ளெல்லாம் திரண்டொரு வடிவம் எடுத்தாற் போன்றவரும், நல்வினை தீவினைகளால் வரும் ஆக்கம் கேடுகளில் சம்புத்தி பண்ணுகிறவரும், யாவரையும் மோகிப்பிக்கவல்ல மகாசௌந்தரியமுள்ள ஸ்திரீகள் வலியவந்து தம்மைத் தழுவினும் பரமாணும் பரிமாணமாயினும் சித்தம் திரியாமல் அவர்களை தாயென மதிக்கும் மகாமுனிவரும், திருக்காளத்தியப்பரைத் தினந்தோறும் சைவாகமப்படி அருச்சிப்பவரும் ஆகிய சிவகோசரியார் என்பவர் பிரமமுகூர்த்தத்திலே எழுந்துபோய் பொன்முகலியாற்றிலே ஸ்நானம்பண்ணி சுவாமியை அருச்சிக்கும் பொருட்டுத் திருமஞ்சனமும் பத்திரபுஷ்பமு மெடுத்து சிவநாமத்தை யுச்சரித்துக்கொண்டு சுவாமி சந்நிதானத்திலே போனார். போம்பொழுது அங்கே வெந்தஇறைச்சியும் எலும்பும் கிடக்கக்கண்டு நடுநடுங்கி குதித்து பக்கத்திலே ஓடினார், ஓடிநின்று தேவாதிதேவனே தேவரீருடைய சந்நிதானத்தை யடைதற்கு அஞ்சாத துஷ்டராகிய வேட்டுவப்புலையர்களே

இந்த அநுசிதத்தை செய்தனர்போலும் அவர்கள் இப்படிச் செய்தபோ
ற்கு தேவரீர் திருவுளம் இசைந்தீரோ என்று சொல்லி பதறி அழுது
ந்து புரண்டார், பின்பு சுவாமிக்கு அருச்சனைசெய்யாமல் தாழ்த்தலாகா
னியாது என்று நினைந்து அங்கே கிடந்த இறைச்சியையும், எலும்பை
கல்லையும் திருவலகினால் மாற்றி சம்புரோக்ஷணம்செய்து பின்போ
முகலியாற்றிலே ஸ்நானம்செய்து திரும்பிவந்து வேதமந்திரத்தினாலே
திசெய்து உருத்திரசமகநமகத்தினால் சுவாமிக்கு அபிஷேகம்பண்ணி பத்
ரபுஷ்பங்களால் அருச்சனைசெய்தார், செய்து திருமுன்நின்று இரண்டு
களையும் சிரசின்மேலே குவித்து இரண்டு கண்களினின்றும் ஆனந்தபா
பம் சொரிய திருமேனியெங்கும் மயிர்பொடிப்ப அக்கினியில் அகப்பட்
மெழுகுபோல மனம் மிக உருகி இளகநாத்தழும்ப கீதநடையுள்ளதா
சாமவேதம்பாடினார், பாடியபின் பலமுறை பிரதக்ஷணம்செய்து சாஷ்டா
கமாக நமஸ்கரித்து அருமையாக நீங்கிப்போய் தபோவனத்தை அடை
தார், அதுநிற்க,

முன்னே வேட்டையாடுதற்கு மலைச்சாரலிலே சென்ற திண்ணனா
பன்றி மான் கலை மரை கடமை என்னு மிருகங்களைக் கொன்று அவைக
ளிறைச்சியை முன்போலப் பக்குவப்படுத்தி தேக்கிலையில் வைத்து கொ
ரேணைப்பிழிந்து அதனோடு கலந்து முன்போல திருமஞ்சனமும் புஷ்பமு
கொண்டு மலையிலே ஏறி சுவாமி சந்நிதானத்தை யடைந்து, முன்போல
பூசைசெய்து, இறைச்சிக்கல்லையைத் திருமுன்னேவைத்து இந்த இறைச்
முன்கொண்டுவந்ததுபோலன்று இவை பன்றி மான் கலை மரை கட
என்கிற மிருகங்களின் இறைச்சி இவைகளை அடியேனும் சுவைபார்த்தி
க்கிறேன் தேனும் கலந்திருக்கின்றது, தித்திக்குமென்றுசொல்லி உண்
து அவருக்குப்பக்கத்திலே பிரியாமல் நின்றார், அப்போது முதனுடன்போ
நாணனும் காடனும் ஆகிய இருவராலும் தன்புத்திராகிய திண்ணனு
டைய செய்கைகளை அறிந்த நாகன் ஊணும் உறக்கமுமின்றித் தேவரா
யையுங் கொண்டுவந்து திண்ணனாரைப் பற்பல திறத்தினாலே வசிக்க
அவர்வச மகாமாயைக்கண்டு சிந்தைநொந்து இனிஎன்னசெய்வோமென்
சொல்லிக்கொண்டு அவரைவிட்டுத் திரும்பிப் போய்விட்டான்.

இருவினையொப்பும் மலபரிபாகமுமுடையதிண்ணனார் பகற்காலத்தி
மிருகங்களைக் கொன்று சுவாமிக்கு இறைச்சியை ஊட்டியும் இராக்கா
திலே நித்திரைசெய்யாமல் சுவாமிக்கு அருகே நின்றும் இப்படித்தொண்
செய்துவந்தார். சிவகோசரியாரும் தினந்தோறும் வந்து சந்நிதானத்தி
இறைச்சி கிடத்தலைக்கண்டு, இரங்கி சுத்திசெய்து சைவாகம விதிப்படி
ருசசித்துக்கொண்டு இந்த அநுசிதம் நிகழாமல் அருளல் வேண்டுமென்
பிரார்த்தித்துவந்தார் திருக்காளத்தியப்பர் அந்தச் சிவகோசரியாருடை
மனத்துயரத்தை நீக்கும் பொருட்டு ஐந்தாநாள் இராத்திரியில் அவருக்
சொப்பனத்திலே தோன்றி அன்பனே அவனை வேடுவனென்று நீ நினை
தே அவனுடைய செய்கைகளை ... அவனுடைய உ

முழுதும் நம்மேல் வைக்கப்பட்ட அன்புருவமே, அவன் அறிவு முழுதும் நம்மை அறியும் அறிவே அவனுடைய செய்கைகள் எல்லாம் நமக்கு இதமாகிய செய்கைகளே நம் முடியின்மேல் உன்னாலே சாத்தப்பட்ட பூக்களை நீக்கும்படி அவன் வைக்கின்ற செருப்படி நம்முடைய குமாரனாகிய சுப்பிரமண்ணியனுடைய காலினும்பார்க்க நமக்கு மிகுந்த ஆனந்தத்தைத் தருகின்றது, அவன் தன்வாயினால் என்மேல் உமிழுகின்ற ஜலமானது அன்புமயமாகிய அவனுடைய தேகமென்னும் கொள்களத்தினின்றும் ஒழுகுகின்றபடியால் கங்கை முதலாகிய புண்ணிய தீர்த்தங்களைப் பார்க்கினும் நமக்குப் பரிசுத்தமுள்ளதாய் இருக்கின்றது. அவன் தன்னுடைய தலைமயிரிலே செருகிக் கொண்டுவந்து நமக்குச் சாத்துகின்ற புஷ்பங்கள், அவனுடைய மெய்யன்பானது விரிந்து விழுதல்போல விழுதலால், பிரம விஷ்ணு முதலாகிய தேவர்கள் நமக்குச் சாத்தும் புஷ்பங்களும் அவைகளுக்குச் சற்றேனும் சமானமாகாவாம் அவன் நமக்குப்படைக்கிற மாமிசம் பதமாக வெந்திருக்கின்றதோஎன்று அன்பினால் உருகி இளகிய மனசினோடும் மென்று சுவைபார்த்துப் படைக்கப்பட்டபடியால் வேதவிதிப்படி யாகம் செய்கின்றவர்கள் தரும் அவியிலும் பார்க்க நமக்கு அதிக மதுரமாயிருக்கின்றது, அவன் நம்முடைய சந்நிதானத்தில் நின்று சொல்லும் சொற்கள் நிஷ்களங்கமாகிய அன்பினோடும் நம்மை அன்றி மற்றொருவரையும் அறியாது வெளிப்படுதலால் வேதங்களும் மகாமுனிவர்கள் மகிழ்ந்து செய்கின்ற ஸ்தோத்திரங்களும் ஆகிய எல்லாவற்றிலும் பார்க்க நமக்குமிக இனியனவா யிருக்கின்றன. அவனுடைய அன்பிலாகிய செய்கைகளை உனக்குக் காட்டுவோம், நீ நாளைக்கு நமக்குப் பிற்பக்கத்திலே ஒளித்திருந்து பார் என்றுசொல்லி மறைந்தருளினார். சிவகோசாரியார் சொப்பனவத்தையை நீங்கிச் சாக்கிராவத்தையை யடைந்து பரமசிவன் தமக்கு அருளிச்செய்த வார்த்தைகளை நினைந்து நினைந்து அறியாமையே நிறைந்துள்ள இழிவாகிய வேடுவர் குலததிலே பிறந்த அவருக்கு வேதாகமாதி சாஸ்திரங்களிலே மகா பண்டித்தியமுடைய மகாமுனிவர்கள் தேவர்களிடத்திலும் காணப்படாத சமானாதிகரகிதமாகிய இவ்வளவு பேரன்பு வந்தது. ஐயையோ! எவ்வளவு அருமை என்று ஆச்சரியமும், இப்படிப்பட்ட பேரன்பர் செய்த அன்பில் செய்கைகளைப் புழுத்த நாயினும் கடையனாகிய பாவியேன் அநுசிதம் என்று நினைந்தேனே ஐயையோ இது என்னகொடுமை என்று அச்சமும் அடைந்து உஷக்காலத்திலே போய்ப் பொன்முகலியாற்றிலே ஸ்நானம்பண்ணி மலையில் ஏறி முன்போலச் சுவாமியை அருச்சித்து அவருக்குப் பிற்பக்கத்திலே ஒளித்திருந்தார்.

சிவகோசரியார் வருதற்கு முன்னே வேட்டையாடுதற்குச் சென்ற திண்ணனார் வேட்டையாடி இறைச்சியும் திருமஞ்சனமும் புஷ்பமும் முன் போல அமைத்துக்கொண்டு அதிசீக்கிரமாகத் திரும்பினார், திரும்பிவரும் பொழுது பலபல துர்ச்சகுனங்களைக்கண்டு, இந்தச் சகுனங்களெல்லாம் உதிரங் காட்டுகின்றன. ஆ! கெட்டேன் என்கண்மணிபோன்ற சுவாமிக்கு

என்ன அபாயம் சம்பவித்ததோ அறியேனே என்று மனங்கலங்கி அதிசீ
கிரமாக நடந்தார். அடியார்களுடைய பக்திவலையில் அகப்படுகின்ற அரு
கடலாகிய பரமசிவன் திண்ணனாருடைய அன்பு முழுதையும் சிவகோச
யாருக்குக் காட்டும் பொருட்டுத் திருவுளங்கொண்டு தம்முடைய வல
கண்ணினின்று இரத்தம் சொரியப்பண்ணினார். திண்ணனார் தூரத்தி
கண்டு விரைந்தோடி வந்தார். வந்தவுடனே இரத்தம் சொரிதலைக்கண்டா
காணவும் வாயிலுள்ள திருமஞ்சனம் சிந்த கையில் இருந்த இறை
சிதற அம்பும் வில்லும் விழ தலைமயிரிலே செருகப்பட்ட புஷ்பங்கள் அ
ழ்ந்துசோர ஆட்டுகின்ற கயிறு அற்றபொழுது வீழ்கின்ற நாடகப்பா
போலச் சீக்கிரமாகப் பதைபதைத்து நிலத்திலே விழுந்தார். விழுந்த
எழுந்துபோய் இரத்தத்தைப் பலமுறை கையினாலே துடைக்க அது ஊ
தல் தவிராமையைக்கண்டு அதற்கு இன்னது செய்வோம்என்று அறி
வராகி பெருமூச்செறிந்து திரும்பிப்போய் விழுந்தார். நெடும் பொழு
உள்ளுயிர்த்தல் இன்றி இறந்தவர்கள்போலக் கிடந்தார். பின் ஒருவா
தெளிந்து இப்படி செய்தவர்கள் யாவர் என்று சொல்லிக்கொண்டு எழு
தார். எங்கும் பார்த்தார், வில்லையெடுத்து அப்புகளைத் தெரிந்துகொண்
என்னுடைய சுவாமிக்கு இத்தீங்குவந்தது எனக்கு பகைவர்களாகிய வே
வர்களாலோ இந்த வனத்திற் சஞ்சரிக்கின்ற துஷ்டமிருகங்களாலோ
தென்று தெரியவில்லையே என்றுசொல்லி மலைப் க்கங்களிலே நெடுந்
மட்டுந் தேடிப்போனார். வேடர்களையேனும் விலங்குகளையேனும் காணா
ராகி திரும்பிவந்து குறைவில்லாத துன்பத்தினாலே மனம் விழுங்கப்ப
சுவாமியைக் கட்டிக்கொண்டு இடியேறுண்ட சிங்கேறுபோல வாய்விட்
கண்ணீர் சொரிய அழுதார், என்னுயிரினும் சிறந்தவரும் அடைந்தவர்
அன்பினாலே பிரியமாட்டாதவரும், ஆகிய சுவாமிக்கு எப்படி இந்த து
பம் சம்பவித்ததோ இதைத் தீர்ப்பதற்கு மருந்தொன்றை அறியேனே
ஐயையோ இதற்கென்ன செய்வேன் என்றார், இந்த உதிரம் என்னசெய்
தால் நிற்குமோ இந்தத் தீங்கைச் செய்தவர்களைக் காணேன் வேடர்க
அம்பினாலாகிய புண்ணைதீர்க்கின்ற பச்சிலை மருந்துகளை மலையடிவாரத்தி
பிடுங்கிக்கொண்டு வருவேன் என்று சொல்லிக்கொண்டு போனார் தன்
த்தைப் பிரிந்துவந்த இடபம்போலச் சுவாமியைப் பிரிந்து வந்ததினால்
வெருட்கொண்டு வனங்களெங்கும் திரிந்து பலவகையாகிய பச்சிலைகளை
பிடுங்கிக்கொண்டு சுவாமிமேல் வைத்த மனசிலும் பார்க்க விரைந்து வ
அம்மருந்துகளைப் பிழிந்து அவர் கண்ணிலே வார்த்தார், அதினால் நி
கண்ணி லிரத்தம் தடைப்படாமையைக் கண்டு ஆவிசோர்ந்து இனி
தற்கு என்ன செய்வேன் என்று ஆலோசித்துக்கொண்டு நின்றார்,
ஊனுக்கு ஊடல் வேண்டும் என்னும் பழமொழி அவருடைய ஆத்தும
த்திலே வந்தது, உடனே இனி என்னுடைய கண்ணை அம்பினாலே தோ
ந்து அம்பினல் சுவாமியுடைய கண்ணினின்று பாயும் இரத்தம் தடை
படும் என்று [illegible]

முன்னே இருந்து அம்பையெடுத்துத் தம்முடைய கண்ணைத்தோண்டிச் சுவாமியுடைய கண்ணிலே அப்பினார், அப்பினமாத்திரத்திலே இரத்தம் தடைப்பட்டதைக் கண்டார். உடனே அடங்குதற்கரிய சந்தோஷமாகிய கடலிலே அமிழ்ந்திக் குதித்துபாய்ந்தார் மலைபோலபருத்த புயங்களிலே கைகளினாலே கொட்டி ஆரவாரித்தார், கூத்தாடினார், நான்செய்தசெய்கை நன்று நன்று என்றுசொல்லி வியந்து, அத்தியந்த ஆனந்தத்தினாலே உன்மத்தர்போலாயினர், இப்படி சந்தோஷசாகரத்திலே உலாவும்பொழுது திருக்காளத்தி யீசுரர் அந்தத் திண்ணனாருடைய பேரன்பை சிவகோசரியாருக்குப் பின்னும் காட்டுதற்குத் திருவுளங்கொண்டு தம்முடைய மற்ற இடக்கண்ணிலும் இரத்தம்சொரியபண்ணினர், அதுதிண்ணனாருடைய பிரமாணாதீதமாகிய சந்தோஷசாகரத்தை உறிஞ்சியது அக்கினி நிரயத்துள்ளே விழுந்து நெடுங்காலம் துன்பமுற்று அதனைநீங்கிச் சுவர்க்கத்தை அடைந் தின்பமுற்றோனொருவன் பின்னும் அந்நிரயத்திலே வீழ்ந்தாற்போல திண்ணனார் உவகைமாறி கரையில்லாத துன்பக்கடலிலே அழுந்தி ஏங்கி பின்னர் ஒருவாறுதெளிந்து இதற்கு அஞ்சேன், மருந்து கைகண்டுகொண்டேன் இன்னும் ஒரு கண்ணிருக்கின்றதே அதைத்தோண்டி அப்பி இந்நோயைத்தீர்ப்பேன் என்று துணிந்து தம்முடைய கண்ணைத்தோண்டியபொழுது சுவாமியுடைய கண் இவ்விடத்திலிருக்கின்றது என்று தெரியும்பொருட்டு ஒரு செருப்புக்காலை அவர் கண்ணின் அருகிலே ஊன்றிக்கொண்டு பின்னே மனசிலே பூர்த்தியாகிய விருப்பத்தோடும் தம்முடைய கண்ணைத்தோண்டும்படி அம்பைவைத்தார்.

தயாநிதியாகிய கடவுள் அதைச் சகிக்கலாற்றாதவராகி, வேதாகமங்கள் தோன்றிய தம்முடைய அருமைத் திருவாய்மலரைத் திறந்து, "கண்ணப்பநிற்க" என்று அருளிச்செய்து அவர் கண்ணைத் தோண்டும் கையை தம்முடைய திருக்கரத்தினாலே பிடித்துக்கொண்டார் பிரமாதி தேவர்கள் சமஸ்தரும் வேதகோஷத்தோடும் நிலம்புதையக் கற்பகப்பூமாரி பெய்தார்கள் மகாஞானியாராகியசிவகோசரியார் இந்தசமாச்சாரம் முழுதையுங்கண்டு. அத்தியந்த ஆச்சரியமடைந்து சுவாமியைவணங்கினார். அற்றைநாள்முதலாகப் பெரியோர்கள் சுவாமிசொல்லியபடியே அவருக்கு கண்ணப்பர் என்னும் பெயரையே வழங்குகிறார்கள் நெடுங்காலமாக உஷ்ணமாகிய அக்கினி மத்தியில் நின்று ஐம்புலன் வழியே செல்லாதபடி மனசை ஒடுக்கி அருந்தவஞ் செய்கின்றவர்களுக்கும் கிட்டாத பரம்பொருளாகிய கடவுள், ஆறு நாளுக்குள்ளே பெருகிய அன்புமேலீட்டினாலே தம்முடைய திருநயனத்தி லிரத்தத்தைக்கண்டு அஞ்சித் தம்முடைய கண்ணை இடைந்து அத்திருநயனத்தில் அப்புந் திண்ணனாருடைய கையைத்தமது அருமைத் திருக்கரத்தினாலே பிடித்துக்கொண்டு நிஷ்களங்க பத்தியையுடைய கண்ணப்பா! நீ நமக்கு வலப்பக்கத்திலே நில் என்று திருவருள் புரிந்தார். இதைப்பார்க்கினும் பெறவேண்டிய பெரும்பேறு யாது?

கண்ணப்ப நாயனார் புராணம் முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பனிரண்டாவது,

# குங்கிலியக்கலய நாயனூர் புராணம்

சீலமலிதிருக்கடவூர்கலயனூராந்திகழ்மறையோர் பணிவருமைசிதையாமுன்னே
தாலியைநெற்கொளவென்றுவாங்கிக்கொண்டு சங்கையில்குங்குலியத்தார்சாந்தி
ஞாலதிகழ்திருப்பனந்தாணுதர்நேரே நரபதியுந்தொழக்கச்சானயந்துபோதப்
பாலமுதமுண்டாருமரசுமெய்திப் பரிந்தமுதுசெயவருள்சேர்பான்மையாரே.

சோழமண் டலத்திலே திருக்கடவூரிலே பிராமணர் குலத்திலே
தியிற்சிதந்தகலயர் என்பவர் ஒருவரிருந்தார். அவர் அந்தத்திருப்ப
வீரட்டானமென்னுங் கோயிலில் வீற்றிருக்கின்ற பரமசிவனுக்குத
தோறும் குங்கிலியத்தூபம் இட்டுவந்தார் இட்டுவரும் காலத்திலே ப
வனுடைய திருவருளினூலே அவருக்கு வறுமை உண்டாயிற்று, உண்
யும் அவர் தாம்செய்யும் திருப்பணியைத் தவறுமல் நடத்திவந்தார் வ
மிகுதியினூதே நிலங்களைவிற்றும் அடிமைகளைவிற்றும் செலவழித்தார்
படி எல்லாம் செலவானமையால், அவருடைய மக்களும் சுற்றத்தார்
வருந்தினூர்கள் ஒருநாள் அவர் மனைவியார் அரிசி முதலியன வாங்
ஒன்றும் இல்லாமையால் இரண்டு நாளாக பட்டினியிருந்து வருந்தி
புதல்வரையும் சுற்றத்தாரையும் பார்த்து இரங்கி தம்முடைய தாலியை
கணவர் கையிலே கொடுத்து இதற்கு நெல் வாங்கிக்கொண்டுவாரும்
ரூர் குங்கிலியக்கலயநாயனூர் அத்தாலியை வாங்கிக்கொண்டு நெல் கொ
ளும்படி போனூர், போம்பொழுது வழியிலே ஒருவர்த்தகன் குங்கி
பொதிகொண்டு தமக்கு எதிரேவரக்கண்டு மனமகிழ்ந்து சுவாமிக்குத்
மிடும்படி குங்கிலியத்தைப் பெற்றுக்கொண்டேன் இதிலும் பார்க்க மே
கியபேறு உண்டோ என்றுசொல்லி தம்முடைய கையில் இருந்த தா
கொடுத்து அந்தக் குங்கிலியப்பொதியை வாங்கிக்கொண்டு ஆலயத்
விரைந்து சென்று அங்குள்ள பண்டாரத்திலே அக்குங்கிலியத்தை
துவிட்டு சுவாமியைத் துதித்துக்கொண்டு அங்கே இருந்தார். அவர் அ
இருக்க வீட்டிலே அவர் மனைவியாரும் மக்களும் பசியினூலே வாடி
ிராத்திரியிலே இளைப்புற்று நித்திரை செய்யும்பொழுது கருணாகரா
கடவுள் அவ்வீடு முழுதிலும் பொற்குவியலும் நெற்குவியலும் அரிசி
யலும் பிறவளங்களும் நிறைந்து கிடக்கும்படி அருள்செய்து, அம்ம
யாருக்கு சொப்பனத்திலே தோன்றி அனுக்கிரகம் செய்தார், உட
அவர் விழித்தெழுந்து அங்கே இருக்கின்ற செல்வத்தைக்கண்டு பரம
னுடைய திருவருளை வியந்து ஸ்தோத்திரம் செய்துகொண்டு தம்மு
நாயகராகிய குங்கிலியக்கலயநாயனூருக்குத் திருவமுதுபாகம் பண்ண
யத்தனஞ் செய்தார். கிருபாநிதியாகிய பரமசிவன் குங்கிலியக்கலய நா
ருக்குத் தோன்றி நீ ... ண்டிருக்கிருய் உன் வீட்டுக்குப்போ

பாலும் அன்னமும் உண்டு துன்பத்தை ஒழி யென்று திருவாய்மலர்ந் தருளினர். குங்கிலியக்கலய நாயனர் அதைக்கேட்டுக் கைகூப்பி வணங்கி அவருடைய அஞ்ஞையை மறுத்து இருத்தற்கு அஞ்சி அதனைச் சிரசின் மேலே வகித்து கோயிலினின்றும் நீங்கிப்போய்த் தம்முடைய வீட்டினுள் ளே புகுந்தார், புகுந்தநாயனர் அவ்வீடெங்கும் நிறைந்திருக்கின்ற நிதிக்கு வைகளைக் கண்டு மனைவியாரை நோக்கி, இந்தச் சம்பத்துக்கள் எல்லாம் எப்படி வந்தன என்று கேட்க, அவர்சுவாமியினுடைய அருளினல் வந்தன என்ருர் அதுகேட்ட நாயனர் ஒன்றுக்கும் பற்ருத சிறியேனையும் ஆட்கொ ள்ளும் பொருட்டு எங்கள் கடவுளுடைய கருணை இருந்தபடி இப்படியோ என்று கடவுளை வணங்கினர். மனைவியார் விரைவிலே கணவரையும் சிவ னடியார்களையும் விதிப்படி தூபதீபங்களால் ஆராதனைசெய்து அமுதுசெய் வித்தார். குங்கலியக் கலயநாயனர் பரமசிவனுடைய திருவருளினலே மகை சுவரியமுடையவராகி சிவனடியார்களைத் தயிர், நெய், பாலொடு, அமுது செய்வித்து வந்தார், அவர் இப்படி நடக்குங்காலத்திலே திருப்பனந்தா ளென்னும் திருப்பதியில் வீற்றிருக்கின்ற சிவலிங்கம் சாய்ந்திருக்கின்றமை யால் அதனை நிமிரப்பண்ணிக் கும்பிடுதற்கு விரும்பி இராஜாவானவர் தம் முடைய யானைகளெல்லாவற்றையும் பூட்டி இழுப்பித்தார், இழுப்பித்தும் அது நிமிராமையால் அகோராத்திரம் தீராதகவலை யுற்றிருந்தார். குங்கிலி யக் கலயநாயனர் அந்த சமாசாரத்தைக் கேள்வியுற்று சுவாமி தரிசனஞ் செய்யும் பொருட்டு திருப்பனந்தாளை அடைந்தார். அங்கே சிவலிங்கத் தை நிமிரப் பண்ணவேண்டுமென்கிற ஆசையால் இராஜா வருந்த முறுதலை யும் சேனைகள் யானைகளோடு சிவலிங்கத்தை இழுத்துத் தங்கள் கருத்து முற்ருமையால் பூமியின்மேலே வலிகுறைந்து விழுந்து இளைத்தலையும் கண்டு மனசிலே துன்பங்கொண்டு அடியேனும் இளைப்பைத் தருகின்ற இந்தத் திருப்பணியைச் செய்யவேண்டும் என்று விரும்பி சிவலிங்கத்திலே கட்டப்பட்ட கயிற்றைத் தம்முடைய கழுத்திலே கட்டிக்கொண்டு இழுத் தார், உடனே சிவலிங்கம் நிமிர்ந்தது அப்படி நிமிர்ந்தது அவர் புறத்திலே கட்டி இழுத்த அக்கயிற்றினலோ அன்று அகத்திலே கட்டியிழுத்த அன் புக் கயிற்றினலே யாம். அதுகண்டு இராசாவும் சேனைகளும் மிகுந்தகளிப் பை யடைந்தார்கள். இராஜா குங்கிலியக்கலயரை நமஸ்கரித்து வியந்து ஸ்தோத்திரம்பண்ணி சுவாமிக்கு வேண்டிய திருப்பணிகள் பலவற்றை நிறைவேற்றிக்கொண்டு தமது நகரத்துக்குப் போய்விட்டார். குங்கிலியக் கலயர் சிலநாள் சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு அங்கேயிருந்து பின் தமது வாசஸ்தானமாகிய திருக்கடவூருக்குப் போய் தாம் செய்யுந் திருப் பணியைச் செய்துகொண்டிருந்தார். இருக்கும் நாளிலே அந்த ஸ்தலத் திற்கு எழுந்தருளி வந்த சைவசமயாசாரியர்களாகிய திருஞான சம்பந்த ரையும் திருநாவுக்கரசையும் எதிர்கொண்டு தம்முடைய வீட்டுக் கழைத் துக்கொண்டுபோய், அமுது செய்வித்து அவர்களுடைய திருவருளையும், பரமசிவனது திருவருளையும் பெற்ருர். சிலகாலம் அன்புமேலும் பெருக பலதிருப்பணிகளை செய்துகொண்டிருந்து சிவபதப் பிராப்தியானர்.

குங்கிலியக்கலய நாயனர் புராணம் முற்றிற்று.

---

உ

## பதின்மூன்றுவது,

# மானக்கஞ்சாற நாயனார் புராணம்

கஞ்சநகர்மானக்கஞ்சாறனார்சீர்க்காதன் மகள்வதுவைமணங்காணநாதன்
வஞ்சமலிமாவிரதத்தலைவனாகிவந்து புகுந்தவளளகமகிழ்ந்துநோக்கிப்
பஞ்சவடிக்காமென்னவரிந்துநீட்டும் பத்தரெதிர்மறைந்திறைவன்பணிந்தவர்க்
கெஞ்சலில்வண்குழல்பெற்றபேதை மாதையேயர்பிராற்குதவியருளெய்தினர்.

கஞ்சாறூரிலே வேளாளர் குலத்திலே அரசர்களிடத்திற் பர
யாகச் சேனாதிபதி உத்தியோகத்தில் இருக்கின்ற குடியிலே சிவபத்
யார் பத்திகளிற் சிறந்த மானக்கஞ்சாறர் என்பவர் ஒருவர் இரு
அவர் சிலகாலம் பிள்ளைப்பேறு இன்மையால் அதிதுக்கங்கொண்டு
ளைப் பேற்றின்பொருட்டுப் பரமசிவனை உபாசனைபண்ணி அவருடை
வருளினால் ஒருபெண் குழந்தையைப் பெற்றார். அந்தப் பெண் வ
மணப்பருவம் அடைய கலிக்காமநாயனார் சிலமுதியோர்களை மான
சாற நாயனாரிடத்தில் அனுப்பி அந்தப் பெண்ணைத் தமக்கு விவா
ய்து தரும்படி பேசுவித்து அவர் அதற்கு உடன்பட்டமையை அ
சோதிடர்களாலே நியமிக்கப்பட்ட சுபதினத்திலே மணக்கோலங்கொ
சுற்றத்தார்களோடும் கஞ்சாறூருக்குச் செல்லும்படி புறப்பட்டார்.
கஞ்சாறூருக்கு வருதற்கு முன்னே, கருணாநிதியாகிய பரமசிவ
மகாவிரதி வடிவங்கொண்டு மானக்கஞ்சாறநாயனார் வீட்டுக்குச் செ
அந்நாயனார் அவரைக்கண்டு எதிர்கொண்டு, உபசார வார்த்தைகள்
லி வணங்கினார். மகாவிரதியார் அந்நாயனாரை நோக்கி, இங்கே
மங்கல கீர்த்தியம் நடக்கப்போகின்றது என்று வினவ நாயனார் அடி
டைய புத்திரியின் விவாகம் நடக்கப்போகின்றது என்றார், மகாவி
உமக்குச் சோபனம் உண்டாகுக, என்று ஆசீர்வதித்தார். நாயனா
ளேபோய் மணக்கோலங் கொண்டிருந்த தமது புத்திரியை அ
வந்து மகாவிரதியாரை வணங்கும்படி செய்தார். மகாவிரதியார் த
வணங்கி எழுந்த பெண்ணினுடைய கூந்தலைப் பார்த்து, மானக்கஞ்
நாயனாரை நோக்கி, இந்தப் பெண்ணினுடைய தலைமயிர் நமக்கு பஞ்
வுக்கு உதவும் என்றார், உடனே நாயனார் தம்முடைய உடைவாளை
இவர் இதுகேட்டதற்குச் சிறியேன் என்ன புண்ணியம் செய்தேனோ
ன்று, அந்தப் பெண்ணினுடைய கூந்தலை அடியிலேஅறிந்து அம்மகா
யார் கையிலே நீட்ட கடவுள் தாம் கொண்டுவந்த மகாவிரதி வடி
ஒழித்து, ஆகாயத்திலே உமாதேவியோடு இடபாரூடராய்த் தோன்
அதுகண்டு மானக்கஞ்சாற நாயனார் பரவசமாகி அடியற்றமரம்போல
ந்து நமஸ்கரித்து எழுந்து அஞ்சலியஸ்தராகி நின்றார். சுவாமி அம்
கஞ்சாற நாயனாருக்குத் தம்முடைய சந்நிதானத்திலே தம்முடைய
கருணைத் திறத்தைபுகழ்ந்து கொண்டிருக்கும் பெரும்பேற்றைக்கொ
அந்தர்த்தானமாயினார். கலிக்காமநாயனார் கஞ்சாறூரிலேவந்துசேர்ந்
கே நிகழ்ந்த சமாசாரத்தைக் கேள்வியுற்று மனமகிழ்ந்து திருவ
த்து முண்டிதஸ்திரீயை விவாகம் பண்ணுதல் சாஸ்திர விரோத ம
என்று மனந்தளர்ந்தார் அதற்குச் சுவாமி கலிக்காமா! நீமனந்தளர
டாம் இந்தப்பெண்ணுக் கூந்தலைமீளக் கொடுத்தருள்கின்றோம் என்
ளிச் செய்ததைகேட்டு மனந்தளர்ச்சி நீங்கி, முன்போலக் கூந்தலைப்
அப்பெண்ணை விவாகம் செய்துகொண்டு தன் ஊருக்குப் போய்வி

மானக்கஞ்சாற நாயனார் புராணம் முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பதினான்காவது,

# அரிவாட்டாய நாயனார் புராணம்

தாவில்கணமங்கலத்துள்வேளாண்டொன்மைத்
தாயனார்நாயனார்தமக்கேசெந்நெற்
றூவரிசியெனவிளைவதவையேயாக்துறந்
துணைவுவடுவரிசிதுளங்குகீரை
யாவினிளைந்துடன்கொணர்வோர்கமரிற்
சிந்தவழிந்தரிவாள்கொண்டூட்டியரியாமுன்னே
மாவடுவினொலியுமான்கரமுந்தோன்றி
வாள்விலக்கியமரர்தொழவத்தவன்றே.

சோழமண்டலத்திலே கண்மங்கலம் என்கிற ஊரிலே வேளாளர் குலத்திலே சிவபத்தியிற் சிறந்தவரும் இல்லறத்தை ஒழுங்காக நடத்துகின்றவரும் மிகுந்த செல்வமுள்ளவருமாகிய தாயனார் என்பவர் ஒருவர் இருந்தார், அவர் பரமசிவனுக்குச் செந்நெல் அரிசியும், செங்கீரையும், மாவடுவும் தினந்தோறுங் கொண்டுபோய், அமுது செய்வித்து வருவார். இப்படி நிகழும் காலத்தில் கடவுளுடைய திருவருளினால் அவருக்கு வறுமையுண்டாயிற்று உண்டாகியும், அவர் கூலிக்குநெல் அறுப்பவராகி, தாம் கூலியாகப்பெற்ற செந்நெலெல்லாம் சுவாமிக்கு அமுது செய்வித்து கார் நெல்லைக் கொண்டு தாம் சீவனம் செய்துவந்தார், செய்யும் நாளிலே, பரமசிவன் அவ்வூரிலிருக்கின்ற வயல்களிலுள்ள நெல்லெல்லாம் செந்நெல்லாகும்படி அருள்செய்ய தாயனார் மனமகிழ்ந்து தினந்தோறும் வயல்களுக்குப் போய் நெல்லறுத்து கூலிவாங்கி இப்படிக்கிடைத்தது அடியேன் செய்த புண்ணியத்தால் என்று சுவாமிக்கு மிக அமுது செய்விப்பாரானார். இப்படி நடக்கின்றபடியால் நாடோறும் உணவில்லாமைபற்றி மனைவியார் வீட்டின் பின்புறத்திலுள்ள தோட்டத்திற்குப்போய் இலைக்கறிகொய்து சமைத்து வைக்க, தாயனார் அதை யுண்டு முன்போலத் தாம் செய்யும் திருப்பணியைச் செய்தார். செய்யும் நாளிலே தோட்டத்திலுள்ள இலைக்கறி யெல்லாம் அற்றுப்போக, மனைவியார் தண்ணீர் வார்க்க அதனைப் பானம் பண்ணி, திருப்பணியைச் செய்துவந்தார் இப்படிச் செய்துவரும் நாளிலே ஒருநாள் முன்போலச் சுவாமிக்கு அமுது செய்யும் பொருட்டுச் செந்நெல்லரிசியும் செங்கீரையும் மாவடுவும் கூடையில் வைத்துச் சுமந்து கொண்டுபோக மனைவியார் பஞ்சகவ்வியங் கொண்டு அவருக்குப் பின்னாக நடந்தார். முன் செல்லுகின்ற தாயனார் பசியினால் கால் தள்ளாடித் தவறிவிழ மனைவியார் பஞ்சகவ்வியக் கலயத்தை மூடியிருந்த கையினால் அவரை அணைத்தார். அணைத்தும் எல்லாம் கமரிலே சிந்திப்போகக் கண்டு தாயனார் இனிகோயி

லுக்குப் போவதினாற் பயன் யாது என்று துக்கித்து இங்கே சிந்திய செ
நெலரிசியையும் செங்கீரையையும் மாவடுவையும் கடவுள் அமுது செய்
ருளும் பேற்றைப் பெற்றேனில்லையே என்று அறிவாளினாலே தம்முடை
ஊட்டியை அரியத் தொடங்கினார், அப்பொழுது அவ்வடியார் தம்முடை
கழுத்தை அரிகின்ற கையைத் தடுக்கும் பொருட்டுச் சித்தசித்து பிரபஞ்
மெங்கும் வியாபித்திருக்கின்ற பரமசிவன் உயர நீட்டிய திருக்கரமு
மாவடுவைக்கடித்தலால் உண்டாகுகின்ற விடேல் விடேல் என்னும் ஓசை
யும், கமரினின்றும் ஒழுக்க எழுந்தன, தாயனார் பரமசிவனுடைய திரு
கரம் வெளியில்வந்து அரிவாள் பிடித்த தம்முடைய கையைப் பிடித்தபொ
ழுது பயங்கொண்டு, முந்திய துன்பம் நீங்கி மனம் மிகமகிழ்ந்து அவர்
தமக்குச் செய்த திருவருளை வியந்து அஞ்சலிசெய்து ஸ்தோத்திரம்பண
ணிக்கொண்டு நின்றார், சுவாமி! இடபாரூடராய்த் தோன்றி நீ நம்மிடத்தி
வைத்த அன்பினாலே செய்தசெய்கை நன்றாயிருக்கின்றது நீ உன் மனைவி
யோடு வந்து நமது சிவலோகத்தில் வாழ்ந்திரு என்று சொல்லி அவர்க
உடன் செல்லபோயருளினார். அந்தத் தாயர் என்பவர் இங்கே சிந்தியவை
களைப் பரமசிவன் அமுது செய்யப் பெற்றேனில்லை என்று துக்கித்து அரி
வாளினாலே தம்முடையகழுத்தை அரிதலுற்றபடியால் அவருடைய பெயர்
அரிவாட்ட நாயனார் என்றாயிற்று,

## அரிவாட்டாய நாயனார் புராணம்

முற்றிற்று.

---

சிவமயம்

திருச்சிற்றம்பலம்,

## பதினைந்தாவது,

# ஆனாயநாயனார்புராணம்

மங்கலமா மழைநாட்டுமங்கலமாநகருண்மருவு
புகழானாயர்வளராமேய்ப்பார்
கொங்கலர்பூந்திருக்கொன்றைமருங்குசார்ந்து
குழலிசையினைந்தெழுத்துங்குழையவைத்து
தங்குசராசரங்களெல்லாமுருகாநிற்பத்தம்பிரா
னணைந்துசெவிதாழ்ந்துவாழ்ந்து
பொங்கியவான்கருணைபுரிந்தென்றுமூதப்போ
துகவென்றருளவுடன்போயினாரே.

மழநாட்டிலே மங ்கல நகரிலே ஆயர் குலத்திலே சிவபத்தியிற் சிறந்த ஆனாயர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் தம்முடைய ஏவலாளராகிய மற்றை இடையர்களோடும் பசு நிரைகளைக் காட்டுக்குக் கொண்டுபோய் மேய்த்துக்கொண்டும் காந்தருவ வேதத்திலே சொல்லியபடி செய்யப்பட்ட வேய்ங்குழலினாலே ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைச் சத்தசுரம் பொருந்த வாசித்து ஆன்மாக்களுக்குத் தம்முடைய இசையமுதத்தைச் செவித்துவாரத்தினாலே புகட்டிக்கொண்டும் வருவார். கார்காலத்திலே ஒருநாள் இடையர்கள் பசுநிரைகளைச் சூழ்ந்து கொண்டுசெல்ல, அவ்வானாயனார் கையிலே கோலும் வேய்ங்குழலுங்கொண்டு நிரைகாக்கும்படி காட்டுக்குச் சென்றபொழுது அவ்விடத்திலே மாலையைப்போல நீண்ட பூங்கொத்துகளைத் தாங்கிக்கொண்டு புறத்திலே தாழ்கின்ற சடையினையுடைய பரமசிவனைப்போல நிற்கின்ற ஒருகொன்றை மரத்துக்குச் சமீபத்திலேபோய் அதைப் பார்த்துக்கொண்டு நின்று, அன்பினாலே உருகி இளகிய மனசை யுடையவராகி, வேய்ங்குழலினாலே இசை நூலிலே விதித்தபடி ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை வாசித்தார் அவர் பஞ்சாக்ஷரத்தை அமைத்து வாசிக்கின்றது அதிமதுரமாகிய இசை வெள்ளமானது எவ்வகைப்பட்ட உயிர்களின் செவியிலும் தேவதருவின் பூந்தேனைத் தேவாமிர்தத்தோடு கலந்து வார்த்தல் போலப் புகுந்தது, புற்களைமேய்ந்த பசுக்கூட்டங்கள் அசை விடாமல் அவரை அடைந்து உருக்கத்தினாலே மெய்மறந்து நின்றன. பால் குடித்துக்கொண்டு நின்ற கன்றுகள் எல்லாம் குடித்தலை மறந்துவிட்டு இசை கேட்டுக்கொண்டுநின்றன. எருதுகளும் மான் முதலாகிய காட்டு மிருகங்களும் மயிர் சிலிர்த்துக்கொண்டு அவர் சமீபத்தில் வந்தன ஆடுகின்ற மயிற்கூட்டங்கள் ஆடுதலொழிந்து அவர் பக்கத்தை அடைந்தன மற்றப் பலவகை பட்சிகளும் தங்கள் செவித்துவாரத்தினாலே புகுந்து கீதம் நிறைந்த அகத்

தோடும் அவரருகிலேவந்து உருகிகின்றன, மாடு மேய்த்துக்கொண்டு நின்ற
இடையர்களெல்லாரும் தங்கள் தொழிலை மறந்து கானத்தைக் கேட்டு
கொண்டு நின்றார்கள், விஞ்சையர்களும் சாரணர்களும் கின்னரர்களும்
தேவர்களும் மெய்ம்மறந்து விமானங்களி லேறிக்கொண்டு வந்தார்கள்
வருத்துகின்ற உயிர்களும் வருத்தப்படுகின்ற உயிர்களும் அவ்விசை
கேட்ப அதன் வசமானபடியால் பாம்புகள் மயங்கி பயமின்றி மயில்களின்
மேலே விழும், சிங்கமும் யானையும் ஒருங்கே கூடிவரும், மான்கள் பு
களின் பக்கத்திலே செல்லும், மரக்கொம்புகள் தாமும் சலியாதிருந்
இப்படியே சாம் அசரம் என்னும் ஆன்மவர்க்கங்களெல்லாம் ஆனாய
னாருடைய வேய்ங்குழல் வாசனையைக் கேட்டு இசைமயமாயின அவ்விசை
யைப் பொய்யன புக்கப்படாத பரமசிவன் கேட்டு பார்வதி தேவியோடு
இடபாரூடராய் ஆகாயமார்க்கத்தில் எழுந்தருளி வந்துநின்று, அவ்வானாய
நாயனாரைக் கடாட்சித்து மெய்யன்பனே நம்முடைய அடியார்கள் உன்னு
டைய வேய்ங்குழலிசையைக் கேட்கும்பொருட்டு நீ இப்பொழுது இவ்வி
டத்தில் நின்றபடி நம்மிடத்துக்கு வருவாய் என்று திருவாய் மலர்ந்தரு
அவ்வானாயநாயனார் வேய்ங்குழல் வாசித்துக்கொண்டு பக்கத்திலே சென்று
கைலாசத்தை அடைந்தார்.

ஆனாய நாயனார் புராணம் முற்றிற்று.

---

இலைமலிந்த சருக்கம் முற்றிற்று.

---

உ

சிவமயம்.

# மூன்றாவது,

# மும்மையாலுலகாண்ட சருக்கம்

## பதினான்காவது,

## மூர்த்தி நாயனார் புராணம்

வழங்குபுகழ்மதுரைநகர்மூர்த்தியாராம் வணிகர்திருவாலவாய்மன்னர்சாத்த
தழங்குதிரமுழங்கைதரத்தேய்த்தவூறுந் தவிர்ந்தமணர்வஞ்சனையுந்தவிரமன்ன
னிழந்தவுயிரினனுகனாலநல்க வெழில்வேணிமுடியாகவிலங்குவேட
முழங்குபுகழணியாகவிரைநீறாக மும்மையுலகாண்டருளின்முன்னினாரே.

பாண்டிநாட்டிலே மதுராபுரியிலே வைசியர் குலத்திலே சிவபத்தியே ஒரு வடிவெடுத்தாற்போலும் மூர்த்தியார் என்பவர் ஒருவர் இருந்தாரவர் அந்தஸ்தலத்திலே வீற்றிருக்கின்ற சொக்கநாத சுவாமிக்குத் தரிக்கும்பொருட்டுத் தினங்தோறும் சந்தனக்காப்புக்கொடுத்து வருங்காலத்திலே, கருநாடதேசத்தரசன் சதுரங்கசேனைகளோடும் அம்மதுரைக்குவந்து பாண்டியனோடு யுத்தம்செய்து அவனைஜபித்து அந்நகருக்கு அரசனாயினான், அவன் புறச்சமயிகளாகிய சமணர்களுடைய போதனாசத்தியினாலே ஆருகமதத்திற் பிரவேசித்து சிவனடியார்களுக் கிடுக்கண் செய்வானாயினான்; ஆயினும் மூர்த்திநாயனார் தாம்செய்யுந் திருப்பணியைத் தவறாதசெய்துவந்தார், அதுகண்டரசன் அவரை ஆருகமதத்திலே பிரவேசிப்பதற்கு உத்தேசித்து அவருக்குப் பல கொடுஞ்செய்கைகளைச் செய்தான், செய்தும் அவர் தம்முடைய திருப்பணியினின்றும் சிறிதும் வழுவாதவராயினா ரதுபற்றி அவ்வரசன் அவர் சந்தனக்கட்டை வாங்கு மிடங்களிலெல்லாம் அவருக்குக் கொடுக்கவொட்டாமற் றடுத்தான், அதனாலவர் மனம்நொந்து இப்பாண்டிநாடு துர்ச்சமயமாகிய ஆருக சமயத்திலே பிரவேசித்துச் சிவபுண்ணியத்துக்கு இடையூறுசெய்கின்ற அதிபாதகனாகிய இவ்வரசனிறக்க சற்சமயமாகிய சைவசமயத்தைப் பரிபாலனம் செய்கின்ற அரசரைச்சாருங்காலம் எக்காலமென்று நினைந்து துக்கித்து, பகற்காலமுழுதும் சந்தனக்கட்டை தேடித்திரிந்து எங்கும் பெறாமையால் ஆலயத்துக்குவந்து சுவாமிக்குத் தரிப்பதற்குத் தேய்த்துக் கொடுக்கும்பொருட்டுச் சந்தனக்கட்டைக்கு இன்றைக்கு முட்டுவந்தாலும் அக்கட்டையைப்போலத் தேய்க்கத்தக்கதைக்கு ஒருமுட்டும் இல்லையென்று ஒருசந்தனக்கல்லிலே தம்முடைய முழங்கையை வைத்து தோலும், நரம்பும், எலும்பு தேய்ந்து குறையும்படி தேய்த்தார். தேய்க்கவும் உதிரம் ஒழுகி நாற்புறத்திலும் பெருகி எலும்பினுள்ளே இருக்கும் துவாரந்திறந்து மூளை வெளியிலே வந்தது. அப்பொழுது அன்பனே நீபத்தியினது உறுதிப்பாட்டினால் இப்படிப்பட்ட செய்கையைச் செய்யற்க. உனக்கு இடுக்கண்செய்த கொடுங்கோலரசன்பெற்ற இந்நாடுமுழுதையும் நீயேகைக்கொண்டிதற்குமுன் இவ்விடத்திலே அவனாலுண்டாகிய கொடுமைகள் யாவற்றையும் நீக்கி, பரிபாலனஞ் செய்துன்னு

டைய பணியை நடப்பித்து, பின்பு நம்முடைய சிவலோகத்தை அடை என்று ஒரு அசரீரிவாக்கெழுந்தது, மூர்த்திநாயனா ரதைக்கேட்டஞ்சி யைத் தேய்த்தலை ஒழிந்து எழுந்தாருடனே அவர் கையானது தேய்ந்த லாகிய ஊறுநீங்கி முன்போலாயிற்று. அவ்விரவிலே அந்தக் கருநாட னிறந்து சிவனடியார்களுக்கு வருத்தம்செய்த பாவத்தினாலே கொடி கிய நரகத்திலே விழுந்தான், மற்றநாள் பிராதக்காலத்திலே மந்திரிமா கூடி தகனசம்ஸ்காரம்செய்து, பின்னர் தங்களரசனுக்குப் புத்திரரில்லா யால் வேறொருவரை அரசராக நியமித்தற்கு உபாயத்தை ஆலோசி யானையைக் கண்கட்டி விடுவோம் அந்தயானை எவரை யெடுத்துக்கொ வருமோ அவரே இந்நாட்டுக் கரசராவாரென்று சம்பிரதாரணை செய் கொண்டு யானையை விதிப்படி அருச்சித்து நீ இந்நாட்டையாளுதற் கே வரை எடுத்துக்கொண்டுவா என்றுசொல்லி, அதை வஸ்திரங்கொண் ணைக்கட்டிவிட்டார்கள். அந்தயானை அந்தப்பட்டணத்து வீதிகளிலே ந்துசென்று சொக்கநாத சுவாமியுடைய ஆலயத்தின் கோபுரத்துக்கு னேபோயிற்று. மூர்த்திநாயனார் இரவிலே தமக்குச் செவிப்புலப் அசரீரிவாக்கினால் மனத்துயரம் நீங்கி, எங்கள் கடவுளாகிய பரமசிவ குத் திருவுளமாகில் அடியேனிந்தநாட்டை ஆளுதற் குடன்படுவேனென் நினைத்துக்கொண்டு கோயிற்புறத்திலே நின்றார். யானையானது அவர் னேசென்று தாழ்ந்தவரை எடுத்து முதுகின்மேல் வைத்துக்கொண் அதுகண்ட மந்திரிமார்கள் அவரை நமஸ்கரித்து யானையின் முதுகி றும் இறங்கி மலர்மாலைகள் தொங்காநின்ற முடிசூடும் ஒரு சாலையினி லேகொண்டுபோய், ஒரு சிங்காசனத்தின்மே லிருத்தி முடிசூட்டுக்கு டும் மங்கலகிர்த்தியங்களைச் செய்யவாரம்பித்தார்கள், மூர்த்திநாயனார் களை நோக்கி ஆருகமதம் நீங்கிச்சைவமயம் விருத்தியாயின் நானி டையாளுதற் குடன்படுவேனென்றார். அதைக்கேட்ட மந்திரிமார் சாஸ்திரபரிசயமுள்ள பிறருமவரை வணங்கிநின்று, சுவாமி! தேவரீரு ஆஞ்ஞையின்படியேயன்றி அதற்குமாறாக யாவர் செய்வார்களென் ன்னார்கள். பின்புமூர்த்திநாயனார் நானரசாள்வேனாகில், எனக்கு விபூதி அபிஷேகதிரவியமும், உருத்திராக்ஷமே ஆபரணமும், சடாமுடியே முமாகுமென்றார். அவர்கள், தேவரீரருளிச்செய்தபடியே ஆகுக சொல்லி, மகுடாபிஷேகத்துக்கு வேண்டும் செய்கைகளைச்செய்து வேற்றினார்கள், மூர்த்திநாயனார் சடைமுடிதரித்து ஆலயத்திற் சென் சுவாமியை வணங்கிக்கொண்டு யானையின்மேலேறி அரண்மனை போய் ந்தார். அங்கே அத்தாணிமண்டபத்திலே இரத்நசிங்காசனத்தின்மே தவளச்சத்திர நிழலிலே வீற்றிருந்துகொண்டு பொய்ச்சமயமாகிய தம் நீங்கவும், மெய்ச்சமயமாகிய சைவசமயமே எங்கும் விளங்கவும், ஞசை சிறிதுமின்றி நெடுங்காலம் விபூதி உருத்திராட்சம், சடைமுடி கிற மூன்றினாலும் அரசாண்டு பின் சிவபதப்பிராப்தியானார்.

மூர்த்திநாயனார் புராணம் முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## பதினேழாவது,

# முருக நாயனூர் புராணம்

மன்னுதிருப்புகலூர்வாழ்முருகனூரா
மறையவர்கோவர்த்தமானீச்சரத்தார்
சென்னியினுக்கழகமருமலர்கள்கொய்து
திருமாலைபுகழ்மாலைதிகழச்சாத்திக்
கன்னிமதிற்கழுமலநாடுடையநாதன்
காதன்மிகுமணங்காணுங்களிப்பினூலே
யின்னல்கெடவுடன்சேவித்தருளான்மீளா
திலங்குபெருமணத்தானையெய்தினூரே.

சோழமண்டலத்திலே திருப்புகலூரிலே பிராமண குலத்திலே சிவபத்தியிற் சிறந்தவராகிய முருகர் என்பவர் ஒருவர் இருந்தார் அவர் தினந்தோறும் சூரியோதயத்துக்குமுன் எழுந்து ஸ்நாநம் பண்ணிக்கொண்டுபோய், கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ, என்கிற நால்வகைப் பூக்களில் உரிய பூக்களைக்கொய்து, பூங்கூடைகளிலே இட்டுக்கொண்டுவந்து, தனியிடத்திலிருந்து பலவகைப்பட்ட மாலைகள் செய்து அந்த ஸ்தலத்திலுள்ள வர்த்தமானீச்சரம் என்னும் ஆலயத்தில் வீற்றிருக்கின்ற பரமசிவனுக்குச் சாத்தி அருச்சனை செய்தும், திவ்விய மந்திரமாகிய ஸ்ரீபஞ்சாட்சரத்தைச செபித்தும் வருவார், இப்படிச் செய்துவருங்காலத்தில், திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளுக்குச் சிநேகிதராகிய பெருமையையும் பெற்றூர். பெற்ற அம்முருகநாயனூர் அந்தத்திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளுடைய திருமணத்திலே தம்முடைய சிவபூசாபலத்தினூலேபோய், பரமசிவனுடைய திருவடிநிழலை அடைந்தார்.

முருக நாயனூர் புராணம்

முற்றிற்று.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

பதினெட்டாவது,

# உருத்திரபசுபதி நாயனார் புராணம்

பங்கமில்வண்புகழ்நிலவுதலையூர்வாழும்
    பசுபதியாரெனுமறையோர்பணிந்துசெந்தே
னங்கமலமடுவினிடையல்லுமெல்லு
    மகலாதேயாகளமாயமர்ந்துநின்று
திங்கள்வளர்சடைமுடியானடிகள்போற்றித்
    திருவெழுத்துமுருத்திரமுந்திகழவோதி
மங்கையிடமுடையபிரானருளான்மேலை
    வானவர்கடொழுமுலகின்மன்னினாரே.

சோழநாட்டிலே திருத்தலையூரிலே பிராமண குலத்திலே பரமசி... டைய திருவடிகளிலே பதிந்த அன்பே தமக்குச் செல்வமெனக்கொ... பசுபதி என்பவர் ஒருவர் இருந்தார். அவர் தாமரைத்தடாகத்திலே அ... ராத்திரம் கழுத்தளவினதாகிய தண்ணீரிலே நின்றுகொண்டு இரண்... களையும் சிரசின்மேலேறக் குவித்து, பரமசிவனுடைய திருவடிக... வாக சிந்தனையோடு வேதத்தின் சாரமாகிய உருத்திரத்தை ஓதி, இ... சென்றபின் சிவபதத்தை அடைந்தார், அதனால் அவர் பெயர் உருத்... பசுபதி நாயனார் என்றாயிற்று.

உருத்திரபசுபதி நாயனார் புராணம்

முற்றிற்று.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பத்தொன்பதாவது,

# திருநாளைப்போவார் நாயனார் புராணம்

நன்மைதிகழ்மேற்காநாட்டாதனூர்வாழ்
நந்தனர்புறத்தொண்டர்நாளைப்போக
பொன்மலிதென்புலியூர்க்கென்றுரைப்பார்புன்கூர்ப்
பொய்கையமைத்தடலேறபிரியநோக்கி
வன்மதில்சூழ்தில்லையிறையருளால்வாய்ந்த
வண்டழலினிடைமூழ்கிமறையோர்போற்ற,
மின்மலிசெஞ்சடைமுநியாயெழுந்துநாதன்
விளங்குநடந்தொழமன்றுண்மேவினரே.

சோழமண்டலத்திலே மேற்காட்டிலே ஆதனூரிலே புலையர்குலத்திலே நந்தனரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரமசிவனுடைய திருவடிகளையே யன்றி மற்றொன்றையும் மறந்தும் நினையாதவர், அவ்வூரிலே தமக்கு வெட்டிமைக்காக விடப்பட்டிருக்கின்ற மானியமாகிய நிலத்தின் விளைவினாலே சீவனஞ் செய்துகொண்டு தாம் செய்யவேண்டும் தொழிலை நடத்துகின்றவர், சிவாலயங்கள்தோறும் பேரிகை முதலாகிய ஒருமுகக் கருவிகளுக்கும் மத்தள முதலாகிய இருமுகக் கருவிகளுக்கும் தோலும் வாரும் வீணைக்கும் யாழுக்கும்நரம்புப்; அருச்சனைக்குக் கோரோசனையும் கொடுக்கின்றவர். ஆலயங்களின் திருவாயிற் புறத்தில் நின்றுகொண்டு அன்பின் மேலீட்டினால் கூத்தாடிப் பாடுகின்றவர், அவர் ஒருநாள் திருப்புன்கூரிலே போய்ச் சுவாமி தரிசனம்பண்ணித் திருப்பணி செய்தற்கு விரும்பி, அங்கேசென்று கோயில் வாயிலிலே நின்றுகொண்டு சுவாமியை நேரே தரிசித்துக் கும்பிடவேண்டும் என்று நினைத்தார். சுவாமி அவருடைய விருப்பத்தின்படியே தமக்கு முன்னிருக்கின்ற இடபதேவரை விலங்கும்படிசெய்து, அவருக்குக காட்சி கொடுத்தருளினார். நந்தனர் அந்தஸ்தலத்திலே ஒரு பள்ளத்தைக் கண்டு, பெரிய குளமாக வெட்டித் தம்முடைய வூருக்குத் திரும்பினார். அவர் இப்படியே பலஸ்தலங்களுக்கும் போய் வணங்கித் திருப்பணி செய்துவந்தார். ஒருநாள் சிதம்பர ஸ்தலத்திற்கு போகவேண்டும் என்று ஆசைகொண்டு, அவ்வாசை மிகுதியினாலே அன்றிரவு முழுதும் நித்திரை செய்யாதவராகி விடிந்தபின் நான் சிதம்பர ஸ்தலத்திற்குப் போனால் கோயிலினுள்ளே பிரவேசிக்கும் யோக்கியதை என் சாதிக்கு இல்லையே என்று துக்கித்து, இதுவும் சுவாமியினுடைய அருள்தான் யென்று சொல்லிப் போகாதொழிந்தார். பின்னும் ஆசை அதிகரித்தலால் நாளைக்குப் போவேன் என்றார். இப்படியே நாளைக்குப் போவேன் நாளைக்

குப் போவேன் என்று அனேக நாட்கள் கழித்தார். அதனால் அவருக் திருநாளைப் போவார் என்னும் பெயர் உண்டாயிற்று.

ஒருநாள் அவர் சிதம்பர தரிசனம் பண்ணவேண்டும் என்னும் ஆசை பிடித்தலால், தம்முடைய வூரினின்றும் புறப்பட்டு, சிதம்பரத்தின் எல் லை அடைந்து, அவ்வூரைச் சுற்றிய மதில் வாயிலிலே புகுந்து அங்கு பிராமணர்களுடைய வீடுகளிலே ஓமஞ் செய்யப்படுதலைக்கண்டு, உட் போதற்கு அஞ்சி அங்கே நமஸ்கரித்து அவ்வெல்லையை வலஞ்செய் கொண்டுபோவார். இப்படி இராப்பகல் வலஞ்செய்து உள்ளே போ கூடாமையை நினைந்து வருந்துகின்ற திருநாளைப்போவார், சபாநாய எப்படித் தரிசிக்கலாம், இந்த இழிந்த பிறப்பு இதற்குத் தடைசெய் தே என்று துக்கத்தோடும் நித்திரை செய்தார். சபாநாதர் அவரு வருத்தத்தை நீக்கி அவருக்கு அருள்செய்யத் திருவுளங்கொண்டு அவரு குச் சொப்பனத்திலே தோன்றி, நீ இந்தப் பிறப்பு நீங்கும்படி நெருப் மூழ்கி எழுந்து பிராமணர்களோடும் நம்முடைய சந்நிதானத்தில் வரு என்று அருளிச்செய்து, தில்லைவாழந்தணர்க்கும் சொப்பனத்திலே ன்றி அந்தத் திருநாளைப்போவார் பொருட்டு நெருப்பை வளர்க்கும் ஆஞ்ஞாபித்து மறைந்தருளினர்.

தில்லைவாழந்தணர்கள் எல்லாரும் விழித்தெழுந்து கோயில் வா லே வந்துகூடி சபாநாயகர் ஆஞ்ஞாபித்தபடி செய்வோம் என்று சொ திருநாளைப் போவாரிடத்திலே சென்று, ஐயரே! சபாநாயகருடைய ஞையினாலே இப்பொழுது உம்பொருட்டுநெருப்பு வளர்க்கும்படி வந் என்றார்கள். அதைக்கேட்ட திருநாளைப்போவார் அடியேன் உய்ந் என்றசொல்லி வணங்கினர். பிராமணர்கள் தென்மதிற் புறத்திலே புர வாயிலுக்கு முன்னே ஒரு குழியிலே நெருப்பு வளர்த்து அதைத் நாளைப் போவாருக்குப்போய்த் தெரிவித்தார்கள். திருநாளைப்போவ அந்நெருப்புக் குழியை அடைந்து சபாநாயகருடைய திருவடிகளை ம லே தியானம்பண்ணி அதனை வலஞ்செய்து கும்பிட்டுக்கொண்டு அதி ளே புகுந்தார். புகுந்தநாயனர் அந்தத் தேகத்தை ஒழித்து புண்ணிய மாகிய பிராமணமுனி வடிவங்கொண்டு உபவீதத்தோடும் சடைமுடி டும் எழுந்தார். அதுகண்டு தில்லைவாழந்தணர்களும் மற்றைச் சிவபக் களும் அஞ்சலிசெய்து களிப்படைந்தார்கள், திருநாளைப்போவார் அ கள் உடன் செல்லச்சென்று கோபுரத்தை அணுகி அதனை நமஸ்கரி எழுந்து உள்ளேபோய்க் கனகசபையை அடைந்தார். பின் அவரை அ நின்ற பிராமணர் முதலியோர் யாவரும் காணாமையால் ஆச்சரியமடை ண்டு ஸ்தோத்திரஞ் செய்தார்கள் சபாநாயகர் திருநாளைப் போவாருக் தம்முடைய ஸ்ரீபாதங்களைக் கொடுத்தருளினர்.

திருநாளைப்போவார் நாயனர் புராணம் முற்றிற்று.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இருபதாவது,

# திருக்குறிப்புத் தொண்டநாயனார் புராணம்

கொந்தலர்பூம்பொழிற்கச்சிநகரேகாலிக்
குலத்தலைவர் தவர்குறிப்புக்குறித்துளார்பால்
வந்திறைவர்நமக்கின்றுதாரீராகின்
வருந்துமுடலெனவாங்கிமாசுநீத்த
கந்தைபுலராதொழியமழையுமாலைக்
கடும்பொழுதும்வரக்கண்டுகலங்கிக்கன்மேற்
சிந்தமுடிபுடைப்பளவிற்றிருவேகம்பர்
திருக்கைகொடுபிடித்துயர்வான்சேர்த்தினரே.

தொண்டைமண்டலத்திலே காஞ்சீபுரத்திலே ஏகாலியர் குலத்திலே சிவனடியார்களுடைய திருக்குறிப்பையறிந்து அவர்களுக்குத் தொண்டு செய்கின்றமையால் திருக்குறிப்புத்தொண்டர் எனப் பெயர்பெற்ற ஒருபெரியவர் இருந்தார், அவர் மிகுந்த விருப்பத்தோடு சிவபத்தர்களுக்கு வஸ்திரம் ஒலித்துக்கொடுத்து வருங்காலத்திலே ஏகாம்பரநாதசுவாமி குளிர்காலத்திலே ஒரு சிவபத்தர் வேடங்கொண்டு, மெலிந்த சரீரத்தையுடைய ஒரு வறியவர்போலாகி அழுக்கடைந்த கந்தையுடன் அவரிடத்திற் சென்றார். திருக்குறிப்புத்தொண்டர் அவரைக்கண்டு எதிர்கொண்டு வணங்கிப் பல உபசார வார்த்தைகளைச் சொல்லி அவருடைய குறிப்பையறிந்து உமது கந்தையைத் தந்தருளும் ஒலித்துத்தருகின்றேன் என்றார். சிவபத்தர் வேடங்கொண்டகடவுள் இந்தக்கந்தை அழுக்கு அதிகமாக ஏறப்பெற்றுத் தரிக்கப்படுதற்குத் தகுதியில்லாததா யிருந்தாலும் குளிர்மிகுதியினால் வருத்தமுறுகின்றபடியால் கைவிடுதல் கூடாது அஸ்தமயனத்திற்குமுன் தருவீராயில் கொண்டுபோய்ச் சீக்கிரமாக ஒலித்துக்கொண்டு வாரும் என்றார், திருக்குறிப்புத்தொண்டர் அடியேன் தாழாமல் ஒலித்து அஸ்தமயனத்துக்குமுன் கொண்டுவந்து தருகின்றேன் தந்தருளும் என்றுசொல்ல சுவாமி விரைவிலே ஒலித்து உலர்த்தித் தராதொழிவீராகில் இந்தத் தேகத்துக்குத் துன்பஞ்செய்தீர் என்று சொல்லி அக்கந்தையை அவர்கையிற் கொடுத்தார். திருக்குறிப்புத்தொண்டர் அதை வாங்கிக்கொண்டு ஒருகுளத்திற் சென்று முன் சிறிதழுக்குப் போக்கி வெள்ளாவியில்வைத்து பின் ஒலிக்கப் புகுந்தார் அப்பொழுது பரமசிவனுடைய திருவருளினாலே நண்பகலொழிந்து பின்பகல்போலத் தோன்றும்படி மேகங்கள் இருண்டு ஆகாயவெளியெல்லாம் மறைத்து மழைபெய்தன, அதுகண்டு திருக்குறிப்புத் தொண்டர் சிவபத்தருக்குத் தாம் வாக்குச்செய்ததை நினைந்து இனிநான் யாது

செய்வேனென்று கவலையுற்று விரைவிலே மழைவிடவுங் கூடுமென்று க
கேதானே நின்றார். அதுவிடவில்லை பின் இராக்காலம்வர திருக்குறிப்
தொண்டர் குளிரினாலே திருமேனி நடுங்குகின்ற சிவபத்தருக்கு நான்
ய்ய விரும்பிய பணிவிடை ஐயையோ தவறிப்போயிற்றே என்று ஏழை
ந்தார், மழைவிடாது சிவபத்தர் சுட்டியகாலமோ நீங்கிற்று, முன்னே
ஒலித்து வீட்டிலே காற்றினால் உலரும்படி கட்டிவிட்டேனுமில்லை சிவப
ருடைய திருமேனி குளிரினால் வருந்தும்படி தீங்குசெய்த சிறியேனு
இனி இதுவேசெயலென்று எழுந்தார் வஸ்திரங்களைப் புடைக்கின்ற கற்
றையிலே என்னுடைய தலையைச் சிந்தும்படி எற்றுவேன் என்று போய்
கற்பாறையிலே தம்முடைய சிரசை எற்ற சர்வவியாபியாகிய பரமசிவ
டைய திருக்கரம் அந்தக்கற்பாறையின் பக்கத்திலே தோன்றி அவரை
பிடித்துக்கொண்டது, ஆகாயத்தினின்று சொரிந்த நீர்மழைநீங்கிப் பூமா
பொழிந்தது, பரமசிவன் உமாதேவியோடும் இடபாரூடராய்க் காட்சி
டுத்தார். திருக்குறிப்புத்தொண்டநாயனார் மிகுந்த அன்பினோடு விழு
நமஸ்கரித்து எழுந்து அஞ்சலிசெய்துக்கொண்டு நின்றார், பரமசி
அவரை நோக்கி, உன்னுடைய பத்திவலிமையை மூவுலகத்தார்களு
தெரிவித்தோம், இனி நீ நம்முடைய உலகத்தையடைந்து பேரின்ப
ற்று வாழ்ந்திரு என்று திருவருள்புரிந்து சென்றருளினார்,

திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## இருபத்தோராவது

# சண்டேசுர நாயனார் புராணம்

வேதமலிசேய்ஞலூரெச்சுதத்தன்
விளங்கியசேய்மறைபயிலும்விசாரசன்மர்
கோதனமேய்ப்பவன்கொடுமைபொறாதுதாமே
கொண்டுநிரைமண்ணியின்றென்கரையினீழற்
றுதகிபின்மணலிலிங்கத்தான்பாலாட்டத்
தாதைபொறாதவையிடறுந்தாள்கண்மாளக்
காதிமலர்த்தாமமுயர்நாமமுண்ட
கலமகனும்பதமருளாற்கைக்கொண்டாரே.

சோழமண்டலத்திலே திருச்சேய்ஞலூரிலே பிராமணர் குலத்திலே
காசிபகோத்திரத்திலே எச்சதத்தன் என்பவன் ஒருவனிருந்தான் அவனுக்
கவன்மனைவியாகிய பவித்திரைவயிற்றிலே விசாரசருமர் என்பவர் ஒருவர்
திருவவதாரஞ் செய்தார். அவருக் கைந்துவயதிலே வேதங்களையும் சை
வாகமங்களையும் பூர்வசன்மத்து அறிவு தொடர்ச்சியினாலே கற்பிப்பார்
இன்றித்தாமே அறியுமறிவு உண்டாயிற்று தந்தை தாயர்கள் அவருக்கு
ஏழுவயதிலே உபநயனச் சடங்குசெய்து தகுந்த ஆசாரியர்களைக் கொண்டு
வேதாத்தியயனம் செய்விப்பக்கத் தொடங்கினார்கள். அவ்வாசாரியர்கள்
வேதங்களையும் பிறகலைகளையும் ஓதுவித்தற்கு முன்னமே அவ்விசாரசரு
மருக்குத் தாமே அறிந்துகொள்ளும்படி அமைந்திருக்கின்ற புத்தியின் றிற
த்தைக்கண்டு ஆச்சரியம் அடைந்தார்கள். பாலிய திசையிலே சான்றோர்
க்கு உரிய குணத்தை அடைந்திருக்கின்ற அவ்விசாரசருமர், ஆன்மாக்க
ளாகிய நாமெல்லோரும் அனாதிமலபந்தர் என்பதும் அம்மலசத்தியைக்
கெடுத்து அதனாலே விளங்காது தடைப்பட்டிருந்த சிவத்துவத்தை விளங்
கும்பொருட்டுச் சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்
கின்ற பஞ்சகிர்த்தியங்களையும் செய்வாராகிய ஒருபதி உண்டு என்பதும்,
அப்பதிக்கு முற்றறிவுடைமை வரம்பிலின்ப முடைமை இயற்கையுணர்
வுடைமை தன்வயமுடைமை வரம்பிலாற்றலுடைமை குறைவிலாற்றலுடை
மை என்கின்ற ஆறுகுணங்களும் இன்றி அமையாதன என்பதும் அக்
குணங்கள் யெல்லாவற்றையும் உடையபதி பரமசிவனே என்பதும் அவர்
அத்தொழில் இயற்றுதல் தமது அபின்ன பூதையாகிய சிவசத்தியாலாகும்
என்பதும் அதுபற்றி அவ்விருவரே நமக்குப் பரமபிதா மாதாக்கள் என்ப
தும் அதனால் அவர்களிடத்திலேயே நாம் அன்பு செய்யவேண்டும் என்ப
தும் அவ்வன்பை மற்றோர் பிறவியில் செய்குவமெனின், அதற்குக் கருவி
யாய்ச் சிறந்துள்ள இம்மானுடப் பிறவி பெறுதற்கரியது என்பதும், அப்
படியாகில் இப்பிறவியிற்றானே இன்னுஞ் சிலநாட்சென்றபின் செய்குவமே

